# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

தமிழ் மாத இதழ்

• Volume : 2 • Issue : 8 • October 2015 • Annual Subscription Rs. 100/- • மலர் 8 • இதழ்: 6 • அக்டோபர் 2015 • வருடச் சந்தா ரூ.100/-



## அன்பே தெய்வம்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





"அகத்தில் அன்பு சிவமாக உள்ளது. புறத்தில் அன்பு தெய்வமாக உள்ளது - செயலாக உள்ளது. சிவமாக இருப்பதன் மூலம் அக உலகம் பூரணத்துவமடைகின்றது. தெய்வமாகச் செயல்படுவதன் மூலம் புற உலகம் மேன்மையடைகிறது.

- ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விருப்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விருப்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
V. A. P. Sharavanan : 99942 05880
Dr. N. Kailasam : 94432 90559
K. S. Jeevamani : 97891 65555
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com







## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ.100/-

ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/-

ஆயுள் சந்தா - ரூ, 1000/-

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

## பகவத் ஐயாவை நேரில் சந்திக்க

| | |
|---|---|
| கோவை | 09.10.2015 to 10.10.2015 |
| திருப்பூர் | 11.10.2015 |
| சேலம் | 12.10.2015 to 15.10.2015 |
| சென்னை | 16.10.2015 to 02.11.2015 |
| திருச்செந்தூர் | 03.11.2015 to 18.11.2015 |
| கரூர் | 19.10.2015 |
| நெரூர் | 20.11.2015 to 22.11.2015 |
| திருவண்ணாமலை | 01.12.2015 to 10.01.2016 |

ஐயாவை சந்திக்க விரும்புபவர்கள் **99442 15677** என்ற எண்ணில் தொடர்பு கொண்டு முன் அனுமதி பெற்று சந்திக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இவண்



ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

# அன்பே தெய்வம்

“அன்பே தெய்வம்; அன்பே சிவம் என்று பலரும் கூறுகிறார்களே, அப்படி என்றால் என்ன? என்ன பொருளில் அவ்வாறு கூறுகிறார்கள்? அன்புக்கும் தெய்வத்துக்கும் என்ன தொடர்பு? அன்பு என்றால் என்ன? தெய்வம் என்றால் என்ன?”

–இப்படி ஓர் அன்பர் கேள்வி ஒன்றைக் கேட்டார்.

நாம் ஏற்கனவே அன்பைப் பற்றி இதற்கு முன்னமே ஒரு கட்டுரையில் பகிர்ந்து கொண்டுள்ளோம்.

அதைப் பற்றியும் சுருக்கமாகப் பார்த்து விட்டு பிறகு அன்புக்கும் இறைவனுக்கும் என்ன தொடர்பு என்பதையும் பார்ப்போம்.

நமக்கு எவரையெல்லாம் பிடிக்கும்? எவரையெல்லாம் பிடிக்காது?

–இப்படி ஒரு கேள்வி கேட்டால் நாம் என்ன பதில் கூறுவோம்?

“என்னுடைய நண்பர்களை எனக்குப் பிடிக்கும்; அவர்களை பிடிக்கும் அளவுக்கு மற்றவர்களைப் பிடிக்காது”.

–இப்படித்தான் நாம் பதில் கொடுப்போம்.

ஒரு சிலரை மட்டும் ஏன் இப்படி நமக்குப் பிடித்துள்ளது?

நமது நண்பர்களை எடுத்துக் கொண்டால் அவர்கள் நமக்கு மகிழ்வளிக்கக் கூடியதை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்கள். அவர்களுடன் இருப்பது நமக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது.

இதுபோல் நாமும் அவர்கள் மகிழ்வடைவதைப் போல் நடந்து கொள்கிறோம். இதனால் நம்முடன் இருப்பது அவர்களுக்கும் மகிழ்ச்சியாக உள்ளது.

நமது நண்பர்களாக இருக்கட்டும் அல்லது நமது உறவினர்களாக இருக்கட்டும்

அவர்கள் நமக்குப் பிடிக்காதவற்றை மட்டுமே செய்கிறார்கள் என வைத்துக் கொள்வோம்.

என்ன நேர்ந்திடும்?

அவர்களைக் கண்டு நாம் ஓடி ஒளிந்து கொள்ள ஆரம்பித்துவிடுவோம்.

அதுபோல் அவர்களுக்குப் பிடிக்காதவற்றை மட்டுமே நாமும் செய்திட ஆரம்பித்தால் அவர்களும் நம்மை விட்டு ஓடி விடுவார்கள்.

நாம் ஒருவருக்கொருவர் பிடித்தமான படி நடந்து கொள்வதையே அன்பு என்று கூறிக் கொள்கிறோம்.

நமது அன்பில் ஒரு கொடுக்கல் வாங்கல் உள்ளது. ஒரு வியாபாரத் தன்மை உள்ளது.

இறைவனோடு இணைத்துப் பார்க்கக்கூடிய புனிதமான அன்பு என இதனைக் கூறிவிட முடியாது.

அப்படியானால் வேறு ஒரு விதமான அன்பு என ஏதாவது உண்டா?

தெய்வீகத் தன்மையுடைய அன்பு ஏதாவது உண்டா?

நம்முடைய சிறிய குழந்தை நமது வீட்டுக்குள் அங்கும் இங்குமாக ஓடிவிளையாடுகிறது என்று வைத்துக் கொள்வோம்.

அந்தக் குழந்தையின் ஒவ்வொரு அசைவும் நமக்கு ரசிக்கும் படியாக உள்ளது. அது எங்கேயாவது கீழே விழுந்து அடிபட்டு விடக்கூடாதே என்று எண்ணுகிறோம்.

நமது குழந்தைக்குப் பதிலாக, பக்கத்து வீட்டுக் குழந்தை நமது வீட்டுக்குழந்தையை போல் நமது வீட்டுக்குள் இப்படி ஓடி ஆடி விளையாடினால் அதை நம்மால் நமது குழந்தையை ரசித்தது போல் ரசித்துப் பார்க்க முடியாது. அது நமது பொருட்கள் எதையாவது இழுத்துப் போட்டு உடைத்து விடக்கூடாதே என்ற எண்ணந்தான் ஏற்படும்.

நம் குழுந்தையின் செயல்களில் நாம் ஈடுபாடு காட்டுகிறோம். பக்கத்து வீட்டுக் குழந்தையின் செயல்கள் மீது நாம் அத்தகைய ஈடுபாட்டைக் காட்டுவதில்லை.

இங்கு எந்தக் குழந்தையின் மீது நாம் அன்பை காட்டுகிறோம்?

அன்பு இங்கே எவ்வாறு செயல்படுகிறது?

நமது குழந்தை மீதுதான் அன்பை காட்டுகிறோம்.

நம் குழந்தை மீது காட்டும் ஈடுபாட்டுக்கும் பக்கத்து வீட்டுக் குழந்தை மீது காட்டும் ஈடுபாட்டுக்கும் என்ன வேறுபாடு?

நமது குழந்தையின் செயல்களுக்கு நாம் முழு சுதந்திரத்தையும், அங்கீகாரத்தையும் வழங்குகிறோம்.

நமது குழந்தை ஒரு கண்ணாடிப் பொருளை வைத்து விளையாடுமேயானால்

கண்ணாடிப் பொருள் உடைந்து விடக்கூடாதே என்பதைவிட

நமது குழந்தைக்கு அதனால் காயம் ஏற்பட்டு விடக்கூடாதே என்ற எண்ணந்தான் மேலோங்கியிருக்கும்.

அந்தக் குழந்தையின் ஒவ்வொரு அசைவுக்கும் நாம் மனப்பூர்வமான அங்கீகாரம் வழங்கிவிடுகிறோம்.

நாம் எங்கெங்கு சுதந்திரத்தை வழங்குகிறோமோ அங்கெல்லாம் நம் மனது சுலபமாக இணைந்து கொள்கிறது.

–சுலபமாக பொருந்திக் கொள்கிறது;

இந்த இணைந்த நிலையைத் தான் அன்பு எனக் கூறுகிறோம்.

நாம் எங்கெல்லாம் இணைகிறோமோ அங்கெல்லாம்

இரண்டற்று ஒன்றாகி விடுகிறோம்.

இந்த இரண்டற்ற ஒருங்கிணைந்த தன்மையைத்தான் அன்பு எனக் கூறுகிறோம்.

இந்த அன்பை ஏன் இறைவனோடு இணைத்துப் பேசுகிறார்கள்?

அன்பே சிவம் என்று ஏன் கூறுகிறார்கள்?

சிவம் என்றால் மங்களம் அல்லது பூரணம், முழுமை என்று பொருள்.

நம்முடைய மனதில் எத்தனையோ விதமான உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

மகிழ்ச்சி, வருத்தம், அமைதி, கோபம், பயம் போன்ற எத்தனையோ உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

மகிழ்ச்சி ஏற்படும் போது நாம் அதனோடு சுலபமாக இணைந்து கொள்கிறோம்.

–சுலபமாகப் பொருந்திக் கொள்கிறோம்.

பயமோ, வருத்தமோ ஏற்படும் போது நம்மால் அவற்றோடு இணைந்து கொள்ள முடிவதில்லை.

பயத்திற்கும், வருத்தத்திற்கும் அனுமதியோ, அங்கீகாரமோ, சுதந்திரமோ கொடுக்கமுடிவதில்லை.

மகிழ்ச்சி ஏற்படும் போது நமக்கும் அந்த உணர்ச்சிக்கும் இடையே இடைவெளி ஏற்படுவதில்லை. இணைவுதான் ஏற்படுகிறது. ஆனால் பயமோ, வருத்தமோ ஏற்படும் போது அப்படி நடப்பதில்லை, நமக்கும் அந்த உணர்ச்சிக்கும் இடையே இடைவெளி ஏற்பட்டு விடுகிறது.

முழுமை இல்லாமல் போய் விடுகிறது. பூரணம் இல்லாமற் போய் விடுகிறது.

நம் உள்ளத்தில் ஏற்படும் பயம், வருத்தம் போன்ற உணர்ச்சிகளுக்கு சுதந்திரம் கொடுப்போமேயாயின்

அங்கு அன்பு செயலுக்கு வந்து விடுகின்றது. இணைவு செயலுக்கு வந்துவிடுகின்றது.

ஆனால் அப்படி நமக்கு பிடிக்காத ஒன்றுக்கு சுதந்திரம் கொடுக்க முடியுமா?

நமக்குப் பிடித்தமான ஒன்றுக்கு நம்மால் சுதந்திரம் கொடுக்க முடியும்; ஆனால் நமக்குப் பிடித்தமில்லாத ஒன்றுக்கு நம்மால் சுதந்திரத்தைக் கொடுக்க முடியாது.

பிறகு நம் உணர்ச்சிகளுக்கு – நமக்குப் பிடித்தமில்லாத உணர்ச்சிகளுக்கு எவ்வாறு தான் சுதந்திரத்தை வழங்குவது?

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள்யாவும் இயற்கையானவை என்பதைப் புரிந்து கொள்வது மட்டும் போதும். அதுவே அவற்றுக்குச் சுதந்திரம் வழங்குவது போன்றது தான்.

நமக்குள் நான் என்று கூறிக் கொண்டு ஒருவர் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். அவர்தான் இந்த உணர்ச்சிகளை நிர்வாகம் செய்வதற்குப் போராடிக் கொண்டிருக்கிறார்.

அந்த "நான்" என்பவரும் நமது நினைவுகளால் உருவாக்கப்பட்ட ஓர் அனுபவமே "அனுபவிப்பவன்" என்ற அதிகாரத்தோடு அவர் செயல்பட்டு வந்தாலும் உண்மையில் அவர் அனுபவிப்பவன் அல்ல. அவரும் ஓர் அனுபவமே.

எல்லாவித மனோ அனுபவங்களுக்கும் சுதந்திரம் வழங்குவது போல் "நான்" என்ற இந்த அனுபவத்திற்கும் சுதந்திரம் வழங்கினால் மட்டுமே சுதந்திரம் என்பது முழுமையானதாக அமையும்.

அந்த "நான்" என்னும் அனுபவத்துக்கு எப்படி சுதந்திரத்தைக் கொடுப்பது?

அதையும் இயற்கையானது என எடுத்துக் கொள்வது தான்

அதற்குக் கொடுக்க வேண்டிய சுதந்திரம் ஆகும்.

நம் மனோ இயக்கம் சுதந்திரமாக இயங்கும் போது அதை அன்பின் இயக்கமாக கருதலாம்.

இந்த இயக்கத்தைப் பூரணம் என்றோ அல்லது சிவம் என்றோ கூறிக் கொள்வோம். இங்கு அனைத்தும் பூரணத்தின் அம்சமாக மட்டுமே செயல்படுகிறது.

நமது குழந்தை தன் கையில் கிடைத்த பொருட்களையெல்லாம் வீசி எறிந்து விளையாடுகிறது. அதைப் பார்த்து நாமும் மகிழ்வடைகின்றோம்.

நம் வீட்டுக்கு வந்த விருந்தினர் மீதும் நம் குழந்தை இப்படி பொருட்களை வீசி எறிந்து விளையாடுவதாக வைத்துக் கொள்வோம்.

அதைப் பார்த்து நம்மால் மகிழ்வடைய முடியுமா?

நாம் நமது குழந்தையைக் கட்டுப்படுத்துகிறோம்; அதன் செயலை நெறிப்படுத்துகிறோம். அதன் சுதந்திரத்தில் குறுக்கிடுகிறோம்.

இப்போது நம் குழந்தை மீது நமக்குள்ள அன்பில் பாதிப்பு ஏற்பட்டு விட்டதா?

பக்கத்து வீட்டுக் குழந்தை இப்படி நம் வீட்டுக்குள் வந்து, பொருட்களையெல்லாம் நம் வீட்டு விருந்தினர் மீது வீசி எறிந்தால் நமக்கு அந்தக் குழந்தை மீது கோபம் ஏற்பட்டுவிடும்.

ஆனால் நம் குழந்தை மீது அத்தகைய கோபம் ஏற்படவில்லை. ஆனாலும் அதனுடைய செயலை எந்த அளவுக்குக் கட்டுப்படுத்த வேண்டுமோ அந்த அளவுக்குக் கட்டுப்படுத்துகிறோம்.

மனதளவில் அந்தக் குழந்தையின் செயலுக்கு சுதந்திரம் வழங்குகிறோம். ஆனால் செயலளவில் அதன் செயலைக் கட்டுப்படுத்துகிறோம்.

இங்கு அன்பு வயப்பட்ட கட்டுப்பாடு மட்டுமே செயல்படுகிறது.

நாம் நமது அணுகுமுறையை அகம், புறம் என பிரித்துக் கொண்டுள்ளோம்.

அகத்தைப் பொறுத்த அளவில் சுதந்திரம் மட்டுமே செயல்பட வேண்டும்; அன்பு மட்டுமே செயல்பட வேண்டும். கட்டுப்பாடுகள் அனைத்தும் மறைந்து விட வேண்டும்.

அதனால் அதனை செயல் என்று கூடக் கூறமுடியாது. அது தான் இயற்கை; அதுதான் இயல்பான இருப்புநிலை; அதுதான் பூரணம்; அதுதான் அன்பு நிலை; அதுதான் சிவம்.

அங்கு இருப்பது மட்டுமே இருக்கிறது. இருக்க வேண்டியது மட்டுமே இருக்கிறது. இருக்கக்கூடாதது எதுவும் அங்குக் கிடையாது.

புறத்தைப் பொறுத்த அளவில் – புற உலகைப் பொறுத்த அளவில், பொறுப்புகள் உண்டு; கட்டுப்பாடுகள் உண்டு; நெறிமுறைகள் உண்டு.

அகத்தை நாம் நிர்வாகம் செய்யக்கூடாது. ஆனால் புறத்தை நாம் நிர்வாகம் செய்தாக வேண்டும்.

புறத்தை எவ்வாறு நிர்வாகம் செய்வது?

நம் குழந்தை செய்யும் தவறுகளை எவ்வாறு நிர்வாகம் செய்கிறோமோ அப்படியே

புறச்செயல்களையும் நிர்வாகம் செய்ய வேண்டும்.

மனதளவில் குழந்தையின் செயல்களுக்கு நாம் சுதந்திரம் வழங்கியதைப் போல்

அகத்தளவில் புறச்செயல்களுக்கும் சுதந்திரம் வழங்கிவிட வேண்டும்.

அதே நேரம் செயலளவில் புறச்செயல்களை நெறிப்படுத்திவிட வேண்டும்.

செயலளவில் செயல்களை நெறிப்படுத்துவது என்பது நம் அனைவருக்கும் தெரியும். ஒருவர் பழத்தோல் வழுக்கி கீழே விழுந்துவிடுகிறார். அதனைப் பார்த்து பக்கத்தில் உள்ளவர்கள் சிரித்துவிடுகிறார்கள்.

அவருக்கு மற்றவர்கள் இப்படிச் சிரித்ததால் அவமானமான உணர்வு ஏற்பட்டு விடுகிறது.

இப்போது அவருக்கு இரண்டு விதமான செயல்கள் உள்ளன.

மனதில் ஏற்பட்ட அவமான உணர்வை எதிர்கொள்ள வேண்டும். இது முதலாவது செயல்.

கீழே விழுந்த நாம் எழுந்து கொள்ள வேண்டும். இது இரண்டாவது செயல்.

முதல் செயல் அகம் சம்பந்தப்பட்டது.

இரண்டாவது செயல் புறம் சம்பந்தப்பட்டது.

முதல் செயலை பொறுத்த அளவில் நமக்கு ஏற்பட்ட அவமான உணர்ச்சியை இயற்கையானதாக ஏற்றுக் கொள்ள வேண்டும். அதனை இயற்கை என எடுத்துக் கொள்வதால் அந்த உணர்வுடன் சுதந்திரம் இணைந்து கொள்கிறது.

–அன்பு இணைந்து கொள்கிறது.

–அகம் சிவமாகிவிடுகின்றது.

புறத்தை பொறுத்த அளவில் நாம் என்ன செய்ய வேண்டும்?

கீழே விழுந்த நாம் எழுந்து கொள்ள வேண்டும். இது தான் நாம் செய்ய வேண்டிய செயல். அதை விடுத்து, நம்மைப் பார்த்து சிரித்தவர்களுடன் சண்டையிடவும் செய்யலாம்.

இவற்றில் எது சரியானது? எது தவறானது?

கீழே விழந்த நாம் எழுந்து கொள்வது நிச்சயம் தவறாகவே இருக்க முடியாது.

சிரித்தவர்களுடன் சண்டையிடுவது மட்டும் தான் எத்தகைய தன்மையில் உள்ளது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும்.

கீழே விழுந்த ஒருவரைப் பார்த்து இன்னுமொருவர் சிரிப்பது சரியான செயலா?

கீழே விழுந்த ஒருவரைத் தூக்கி விடுவதற்கு தான் இன்னொருவர் முன்வர வேண்டுமே தவிர

இப்படி ஏளனமாகச் சிரிப்பது நாகரீகம் அல்ல.

ஆகவே அப்படிச் சிரித்ததற்காக அவரிடம் சண்டையிடுவது குற்றம் ஆகாது.

அப்படியானால் நாம் புறத்தளவில் இரண்டு விதமான செயல்களிலும் ஈடுபட்டுக் கொள்ளலாம். இரண்டுமே சரியான செயல்கள் தாம்.

இந்த புறச் செயல்களில் நாம் எப்படி ஈடுபடுவது?

கீழே விழுந்த நாம் எழுந்து கொள்வது தான் நம்முடைய முதற்செயலாக இருக்கவேண்டும்.

சரி, கீழே விழுந்த நாம் எழுந்து கொண்டு விட்டோம். அடுத்து என்ன செய்ய வேண்டும்?

சிரித்தவர்களைப் பார்த்துத் திட்டவேண்டுமா?

திட்டினால் தவறில்லை என்று பார்த்தோம்.

அப்படித் தான் செய்ய வேண்டுமா? அல்லது வேறு வகையிலும் ஏதாவது செயல்முறை உண்டா?

சிரித்தவர்களுடைய செயல் அநாகரிகமானதாக இருந்தாலுங்கூட அவர்கள் அதனைத் திட்டமிட்டோ, செய்ய வேண்டுமென்றோ விரும்பியோ செய்யவில்லை.

அவர்களையறியாமலேயே சிரித்து விட்டார்கள். ஏதோ நகைச்சுவைக் காட்சியைப் பார்த்தது போல் சிரித்து விட்டார்கள்.

நாம் அவர்களைப் பார்த்துத் திட்டுவதற்குப் பதிலாக, "Thank You"– “நன்றி” என்று கூறுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது அவர்கள் என்ன செய்வார்கள்.

இப்படிச் சிரித்து விட்டோமே என்ற அவமான உணர்ச்சி அப்படிச் சிரித்தவர்களுக்கு ஏற்பட்டுவிடும்.

ஆனால் இப்படி நம்மால் சுலபமாக "Thank You" – நன்றி எனக் கூற முடியுமா?

நாம் கோபங்கொண்டுவிட்டால் இப்படிக் கூறமுடியாது.

நாம் எவ்வாறு இருந்தால் இப்படி நன்றி கூற முடியும்?

நாம் நிதானம் எனும் உணர்வுடன் இருப்போமாயின் இப்படி நம்மால் கூறமுடியும்.

அத்தகைய நிதானம்தான் புறச்செயல்களைப் பொறுத்த வரையிலும் அன்புடைமையாகக் கருதப்படுகிறது.

கீழே விழுந்த நாம் நிதானத்தை இழந்து மற்றவர்களைத் திட்டுகிறோம் என வைத்துக் கொள்வோம்.

கோபத்தில் நம்முடைய வார்த்தைகள் எல்லை மீறிச் சென்றிடவும் வாய்ப்புள்ளது. அதனால் தேவையற்ற தகராறுகள் ஏற்படும் ஆபத்தும் உள்ளது.

இந்த நிதானம் ஏற்பட நாம் என்ன செய்ய வேண்டும்?

அகத்தில் நாம் அன்பாக – பூரணமாக – சிவமாக இருப்பது ஒன்றே புறத்தில் நாம் நிதானமாக நடந்து கொள்வதற்கான வழி.

சிவம் என்பது பூரணமான நிலையைக் குறிக்கிறது.

தெய்வம் என்பது செயல்படுநிலையைக் குறிக்கிறது.

அகத்தைப் பொறுத்த அளவில் பூரணமாக இருக்க வேண்டும்; சுதந்திரமாக இருக்க வேண்டும்.

புறத்தைப் பொறுத்த அளவில் நிதானமாகச் செயல்பட வேண்டும்; தெய்வமாகச் செயல்பட வேண்டும்.

அகத்தில் அன்பு சிவமாக உள்ளது. புறத்தில் அன்பு தெய்வமாக உள்ளது – செயலாக உள்ளது.

சிவமாக இருப்பதன்மூலம் அக உலகம் பூரணத்துவமடைகின்றது.

தெய்வமாகச் செயல்படுவதன் மூலம் புற உலகம் மேன்மையடைகிறது.

– புற உலகம் அன்பின் ஆட்சிக்குள் செயல்படுகிறது.







“சிந்தனையும் உறக்கமும்”

# கேள்வி பதில்

**V.A.P. சரவணன்** (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி :** நான் பகவத் ஐயாவின் புத்தகங்கள், பகவத் பாதைகள் படித்தும் ஞானமுகாமில் கலந்து கொண்டும் நிறைவாக வாழ்ந்து கொண்டு இருக்கிறேன். என்னுடைய நடைமுறை வாழக்கையை எதிர்கொள்வதற்கு பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய ஞானப்புரிதல் எனக்கு மிகவும் உறுதுணையாக இருக்கிறது. மனதில் தாமாக எண்ணம் வருவதும் புரிகிறது. மேலும் மனதின் அகம், புறம் ஓர் அளவிற்கு புரிந்து வைத்துள்ளேன். இருப்பினும் என்னுடைய அதிகப்படியான வேலையின் காரணமாக இரவு உறங்க சென்ற பிறகும் 1,2 மணிநேரம் வேலையைப்பற்றிய சிந்தனை ஓடிக்கொண்டே இருக்கிறது. இரவு உறக்கத்தின் இடையில் சிறுநீர் கழிக்க (Toilet) சென்று திரும்பும் போது கூட வேலை பற்றிய சிந்தனை ஓடிக் கொண்டே இருக்கிறது. இதனால் நிறைவான உறக்கம் இல்லை. வேலையைப் பற்றிய சிந்தனையிலிருந்து நான் விடுபட்டு எப்படி நிறைவாக உறங்கி என்னுடைய வேலைகளைச் நிறைவாக செய்வது?

**பதில் :** மனதில் எண்ணம் தாமாக வருகிறது. அப்படித் தாமாக வந்த எண்ணத்தை நாம் இதுவரை சேகரித்து வைத்துள்ள அறிவைக் கொண்டு சிந்தித்துப் பிறகு சரியான செயலைச் செய்கிறோம். இப்படிச் செயல்படும் போது தான் நம்மால் சரியான செயலைச் செய்ய முடியும்.

எண்ணம் தோன்றுவது தானாகத் தான் ஏற்படுகிறது. ஆனால் சிந்திப்பதும் செயல்படுவதும் நாமாகத் தான் செய்கிறோம். நமது மனது இருவகையில் செயல்படும் தன்மையில் உள்ளது. நமது மனது தாமாக செயல்படும் வகையில் ஒரு பகுதியும், மற்றொரு பகுதி நாமாகச் சிந்தித்து செயல்படுவது என்ற வகையிலும் செயல்படுகிறது. தாமாக ஏற்படக் கூடிய எண்ணம் என்ற பகுதி நமது கட்டுப்பாட்டில் இல்லை. நாமாகச் சிந்தித்துச் செயல்படுதல் என்ற பகுதி நமது கட்டுப்பாட்டில் தான் இருக்கிறது.

தாமாக நடைபெறுகிற பகுதியில் நமது அறிவுக்கு எந்த வேலையும் இல்லை என்ற நமது அறிவின் இயலாமையைப் நாம் புரிந்து கொள்வதைத் தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம். நமது அறிவு தனது இயலாமையைப் புரிந்து கொண்டு நமது மனதிடம் சரணடைவதைத் தான் அகச் சரணாகதி என்று குறிப்பிடுகிறோம்.

மனதின் மற்றொரு பகுதியான தாமாகச் சிந்திப்பதும் செயல்படுவதும் மட்டும் தான் நம் கைவசம் இருக்கிறது. இருப்பினும் நீங்கள் கேட்ட இதே கேள்வியைத் தான் நானும் பகவத் ஐயாவிடம் கேட்டேன். இனி பகவத் ஐயா...

பகவத் ஐயா, "நீங்கள் இரவு உறங்குவதற்கு முன்பாக அடுத்த நாள் நாம் செய்ய வேண்டிய முக்கிய பணிகள் பற்றிய குறிப்புகளை எப்படி எல்லாம் செய்யலாம் என்று ஒரு டைரியில் குறித்துக் கொள்ளுங்கள். இப்படி நாம் குறித்துக் கொள்வதற்கு நமக்கு 10 நிமிடங்கள் போதுமே, பிறகு உறங்கச் சென்று விடுங்கள்...

"இதற்குப் பிறகு நீங்கள் படுத்துவிடுகிறீர்கள், படுத்த கொஞ்ச நேரத்தில் நாளை வேலை பற்றிய முக்கிய குறிப்பு ஒன்று நினைவுக்கு வருகிறது. எழுந்து டைரியில் எப்படிச் செய்யலாம் என்று குறித்து வைக்கிறீர்கள். பிறகு படுத்துவிடுகிறீர்கள். மறுபடியும் படுத்த கொஞ்ச நேரத்தில் நாளை வேலை பற்றிய இன்னொரு முக்கிய குறிப்பு நினைவுக்கு வருகிறது. பிறகு எழுந்து டைரியில் எப்படிச் செய்யலாம் என்பதைக் குறித்துக் கொள்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். இப்படி நாம் செயல்படத் தொடங்கினால் விடிய, விடிய நாளை வேலை சம்பந்தமான குறிப்புகளை டைரியில் எழுதுவதும், பிறகு படுப்பதுமாகத் தான் இருக்குமே தவிர உறக்கம் என்பது கொஞ்சமும் இருக்காது. பிறகு அடுத்த நாள் செய்ய வேண்டிய வேலையை எப்படிச் சிறப்பாக செய்வது? இங்கு நாம் என்ன செய்யலாம்? இரவு உறங்குவதற்கு முன்பாக ஒரு 10 நிமிடம் முக்கியமான வேலை சம்பந்தமான குறிப்புகளை டைரியில் குறித்து வைப்பதோடு நமது வேலை முடிந்துவிடுகிறது. அதன் பிறகு எத்தனை நல்ல நல்ல குறிப்புகள் வந்தாலும் வந்துவிட்டுப் போகட்டும், இப்போது நமது வேலை உறங்குவது; நாளை காலை எழுந்து பிறகு என்ன செய்ய முடியுமோ அதைச் செய்தால் போதும் என்று முடித்துக் கொண்டால் போதும். சிந்தித்தல் என்னும் செயலை நாமாக மீண்டும் மீண்டும் கையில் எடுக்காமல் இருந்தால் போதும்" என்று கூறினார்

இப்போது நாம் நம்முடைய பிரச்சனையைப் பற்றிச் சிந்திப்போம். உறங்குவதற்காக நாம் படுத்துவிடுகிறோம். இந்த இரவு நேரத்தில் நமது வேலை சம்பந்தமாக நாம் எந்தச் செயலும் செய்யப் போவதில்லை. ஆனால் அந்த வேலையை எப்படி எல்லாம் செய்யலாம் என்று சிந்தித்துக் கொண்டே இருப்போம். இப்படியே நேரம் ஓடிவிடுகிறது. பிறகு இந்தச் சிந்தனையிலிருந்து விடுபட்டு நிம்மதியாக உறங்கினால் தான் நம்மால் நாளை வேலையை நன்றாகச் செய்ய முடியும் என்று தோன்றுகிறது. நமது உறக்கத்திற்கு இந்தச் சிந்தனை ஓட்டம் தான் தடையாக இருக்கிறது என்பது நமக்கு நன்றாகப் புரிகிறது. வேலை சம்பந்தமான எந்த செயலும் செய்யமுடியாத இந்த இரவு நேரத்தில் தேவையில்லாமல் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொண்டால் மட்டும் போதும். நமது சிந்தனை சம்பந்தமாக செய்ய வேண்டிய எந்த வேலையும் நமக்குக் கிடையாது என்று முடித்துக் கொள்ள வேண்டும்.

இப்படி நான் தெளிவாகப் புரிந்து கொண்ட பிறகு இரவு உறங்குவதற்கு முன்பாக ஒரு 10 நிமிடம் நாளை வேலை பற்றிய குறிப்புகளை டைரியில் குறித்துக் கொண்டு படுத்துவிடுகிறேன். எண்ணம் தாமாக வருவது இயற்கை அதை நாம் ஒன்றும் செய்ய முடியாது. வந்த எண்ணத்தைத் நாமாக எடுத்துச் சிந்திப்பது தேவையற்றது என்பதைப் புரிந்து கொண்டேன். தாமாக எண்ணம் வருவது நாமாக சிந்திப்பது என இரண்டு வகையில் செயல்பட்டுக் கொண்டிருந்த மனம் பகவத் ஐயாவின் இந்த தெளிவுக்குப் பிறகு தாமாகச் சிந்திப்பதை மட்டும் விட்டு விடுகிறோம். என்னுடைய கவனமே இல்லாமல் சிந்தித்தல் நடைபெற்றாலும் அதற்கு நான் பொறுப்பு ஏற்க வேண்டியதில்லை என்பதையும் புரிந்துகொண்டேன். தாமாக நடைபெறும் இயக்கத்திற்கு முழு சுதந்திரமும் கொடுத்துவிட்டு நாமாகச் சிந்தித்துக்கொண்டிருப்பது தேவையற்றது எனும் போது இரண்டு வகையான மனச் செயல்பாட்டில் நாமாகச் சிந்திப்பது முடிவுக்கு வருகிறது. நாமாகச் சிந்திப்பது முடிவுக்கு வரும் தோறும் நாம் சிந்தனையிலிருந்து அமைதிக்குத் திரும்புகிறோம்.

நாம் அமைதிக்குத் திரும்பிய பிறகு உறக்கம் என்பது இயற்கையாக ஏற்படுகிறது. இது போகவும் இரவு சிறுநீர் கழிக்கச் சென்று திரும்பும் போதும் இந்த நேரத்தில் தேவையில்லாமல் நாமாக சிந்தித்துக் கொண்டு இருக்கிறோம் என்பது நினைவுக்கு வந்தவுடன் சிந்தனையிலிருந்து விடுபட்டு அமைதிக்குத் திரும்புகிறேன். நாமாகச் சிந்திப்பது இந்த இரவு நேரங்களில் தேவையற்றது என்பதைப் புரிந்து கொண்ட பிறகு சில நாட்களில் மாற்றத்தை கொஞ்சம், கொஞ்சமாக உணர முடிந்தது. இப்படி புரிந்து செயல்படும் போது நமக்குத் தேவையான உறக்கமும் கிடைக்கிறது. காலை எழுந்து செய்ய வேண்டிய வேலைகளைத் திட்டமிட்டு எதை முதலில் செய்வது, எதை பிறகு செய்வது எனப் பிரித்து முறைபடுத்தி நிறைவாகவும் செயல்பட முடிகிறது.

உதாரணமாக, நம் அன்றாட வாழ்வில் இரவு வேலைகளை முடிந்த அளவிற்கு முடித்துவிட்டு கை, கால், முகம் கழுவி பிறகு தளர்வான உடைக்கு மாறி இரவு உணவை முடித்துக் கொண்டு மனைவி, குழந்தைகள் அன்றைய குடும்ப நிகழ்வுகள் பற்றி சிறிது நேரம் பேசிவிட்டு பிறகு உறங்குவதற்கு முன்பாக வீட்டின் வெளிக்கதவு, வாசல்கதவு, பின்வாசல் கதவு என அனைத்தும் பூட்டப்பட்டு இருக்கிறதா என்பதை உறுதிபடுத்திக் கொண்டு குடிப்பதற்குத் தேவையான தண்ணீரை எடுத்துக் கொண்டு தளர்வாகப் படுத்துவிடுவோம். நாம் மேலே கூறிய அத்தனை நிகழ்வுகளும் நாம் நிறைவாக உறங்குவதற்காகச் செய்துகொண்ட வெளிப்புறச் செயல்கள் ஆகும்.

இதே போல் நாம் மனோரீதியாகவும் காலை கண் விழித்தது முதல் இரவு உறங்கும் வரை எத்தனையோ எண்ணங்கள் எத்தனையோ சிந்தனைகள், செயல்கள் என அனைத்தையும் முடித்துவிட்டுத் தான் தளவர்வாக உறங்கச் செல்கிறோம். இங்கு தாமாக வரும் எண்ணத்திற்கு நம்மால் ஒன்றும் செய்யமுடியாது என்று முடித்துக் கொண்டு சிந்தித்தல் என்னும் நமது செயலை நாமாக கையில் எடுக்காமல் இருந்தால் போதும், தேவையற்ற சிந்தனையிலிருந்து விடுபட்டு, அமைதிக்குத் திரும்பி தளர்வாகி உறக்கத்தை நோக்கி சென்றுச் விடுவோம்.

பொதுவாக இந்தப் புரிதல் ஒன்றே நம்முடைய எல்லா விதமான பிரச்சினைகளுக்கும் தீர்வாக அமைகிறது. இந்தப் புரிதலைப் பற்றி சென்னை வெஸ்ட் மாம்பலத்தை சேர்ந்த நமது நண்பர் ரவிச்சந்திரன் ஐயா அவர்கள் ஓர் அழகிய உதாரணத்தைக் கூறினார். அதாவது ஒரு வீட்டின் அளவோடு கதவை ஒப்பிடும் போது கதவு மிகச்சிறியது. கதவோடு பூட்டை ஒப்பிடும் போது பூட்டு மிகச் சிறியது. பூட்டோடு சாவியை ஒப்பிடும் போது சாவி மிகச் சிறியது. மிகச்சிறிய சாவியைக் கொண்டுதான் கதவைத் திறந்து வீட்டில் நம்மால் பிரவேசிக்க முடியும்.

அதைப் போல் நமது மனவீட்டின் மனக் கதவின் பூட்டைத் திறப்பதற்கு புரிதல் என்னும் மிகச்சிறிய சாவியைக் கொண்டு திறந்தால் மட்டுமே போதும். நம்மால் மனதை நிறைவாக எதிர்கொள்ள முடியும். இந்தப் புரிதல் ஒன்றே போதும். பிரவகித்து ஓடும் ஆற்றில் எப்படிக் கடும் பாறைகளும் உருண்டு கூழாங்கற்களாக உருமாற்றமடைந்து பிறகு மணல் துகள்களாக மாறிவிடுமோ அப்படி நமது மனதில் தேங்கி உள்ள அத்தனை பிரச்சனைகளும் ஓடி மறைந்து விடும்.

புரிதல் ஒன்றே வாழ்வின் திறவுகோல்.

## ANDROID MOBILE APP

தற்போது நாம் அனைவரும் Android Mobile Phone பயன்படுத்துகிறோம். ஐயாவின் நிகழ்ச்சிகளையும் பகவத் பாதையையும் நமது நூல்கள் அனைத்தையும் Mobile App வழியாக படிக்க வசதியாக App ஒன்றை உருவாக விரும்புகிறோம். இது அனைவருக்கும் பயனுள்ளதாக அமையும் இந்த App-ஐ தயாரிக்கத் திறமையும் சேவை மனப்பான்மையும் உள்ள அன்பர்கள் எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.



## ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்த சகப் பயணியின் வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் சிறப்புரை கூட்டம் "தன்னை அறியும் ஞானம்" என்ற தலைப்பில் ஆகஸ்ட் மாதம் 29,30 தேதிகளில் புதுச்சேரியிலும் செப்டம்பர் மாதம் 5,6 ஆம் தேதிகளில் பெங்களூரிலும் நடைபெற்றது.

மேலும் முதன்முறையாகத் தர்மபுரியில் 13.09.15 அன்று தன்னை அறியும் ஞானம் என்ற தலைப்பில் நமது பகவத் ஐயாவின் சிறப்புரை நிகழ்ச்சி நடைபெற்றது. இதில் சுமார் 150 அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதேபோல் சென்னை மைலாப்பூரிலும் 27.09.2015 அன்று நடைபெற்றது, இந்நிகழ்ச்சிகள் அனைத்தையும் ஏற்பாடு செய்த நமது பகவத் பாதை பயணிகள் அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் வாழ்த்துகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

தர்மபுரி நிகழ்ச்சிக்கு பிறகு ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் நமது ஆஸ்ரம கட்டிட பணியை பார்வையிட்டுவிட்டு சென்னை திருப்பினார். நமது ஐயாவின் ஆசியோடு ஆஸ்ரம கட்டிடபணி சிறப்பாகவும் விரைவாகவும் நடைபெற்று வருகிறது.

சென்ற இதழில் நமது வேண்டுகோளுக்கு இணங்க இந்தக் கட்டிட பணிக்கான தங்களது பங்களிப்பைச் செலுத்தி மேலும் சில அன்பர்கள் ஸ்ரீபகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக இணைந்துள்ளார்கள். அவர்களுக்கு நமது பகவத் மிஷன் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

பசுமையான மலைகள் சூழ்ந்த திருவருட்சோலையில் ஐயாவின் தங்குமிடமாகவும் நாம் அனைவரும் குடும்பத்துடன் வந்து தங்கி ஞானத் தெளிவு பெற்றுச் செல்லும் இடமாகவும் அமையக்கூடிய ஆஸ்ரமத்திற்கான கட்டிடப் பணியில் நம் அனைவரது பங்கும் இருக்க வேண்டும் என்பது என் அன்பான வேண்டுகோள்.

நமது பகவத் ஐயா வழங்கும் புரிதலால் உலகத்திற்கே ஒளி கொடுக்கும் இடமாக நமது ஸ்ரீபகவத் பவன் ஆஸ்ரமம் அமையப்போவது இயற்கையின் விருப்பம்.

அவ்வுயர்ந்த இடம் நம் பாதையில் பயணிக்கும் அனைவரது ஒத்துழைப்பாலும் பங்களிப்பாலும் உருவாக வேண்டும் என்பது நமது விருப்பம்.

பாதையில் பயணிப்போம், தமது தொண்டால் புரிதலை உலகெங்கும் பகிர்வோம்.



## நெரூரில் 3 நாள்

# ஞானமுகாம்

### வழங்குபவர் : ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்

### இடம் : காஞ்சி சங்கர மட வளாகம்,
### நெரூர் அக்ரஹாரம்.

நாள் : 20.11.2015 வெள்ளிக்கிழமை இரவு 7.00 மணி முதல்
22.11.2015 ஞாயிற்றுக்கிழமை மாலை 3.00 மணி வரை

ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மைய அன்பர்கள் நவம்பர் மாதத்தில் நெரூரில் பகவத் ஐயா அவர்களின் 3 நாள் ஞானமுகாம் ஏற்பாடு செய்துள்ளனர்.

.கரூரில் இருந்து திருமுக்கூடலூர் செல்லும் வழியில் இருக்கும் காவேரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஆன்மிகத்தில் சிறப்பு வாய்ந்த இடமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகத்திற்கு அருகில் நெரூர் அக்ரஹாரத்தில் அமைந்துள்ள காஞ்சி சங்கர மடத்தில் நடைபெற உள்ளது.

தலைப்புகள் :

**ஞானத் தெளிவு | அகம் புறம் | நான் யார்? | நினைவும் சிந்தனையும்**
**கர்ம வினைகள் | ஞானத் தெளிவில் உறுதி**

20.11.2015 அன்று அனைவருக்கும் இரவு உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இரவு உணவுக்குப்பின் அறிமுக வகுப்போடு ஞானமுகாம் ஆரம்பிக்கப்பட உள்ளது.

ஆண்கள் தங்குவதற்கும், பெண்கள் தங்குவதற்கும் தனித்தனி இடவசதி உண்டு.

நமது ஞானமுகாம் எந்த ஆன்மிக அமைப்போடும் முரண்பாடு கொண்டதன்று, எனவே எந்த ஆன்மிக அமைப்பைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் ஞானத்தேடுதல் கொண்டவர்களாக இருப்பின் இந்த ஞானமுகாமில் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெறலாம்.

வழி : கரூரிலிருந்து திருக்கூடலூர் செல்லும் பேருந்தில் பரிசல் துறை என்கிற சதாசிவன் கோயில் பஸ் நிறுத்தத்தில் இறங்க வேண்டும். பஸ்நெ.4 மற்றும் மினிபஸ் வசதி உள்ளது.

கரூர் இரயில் நிலையத்தில் இறங்குபவர்கள் பக்கத்தில் மார்கெட் ஸ்டாப் வரை நடந்து சென்று ஞானமுகாமிற்கு வரலாம்.

ஞானமுகாமில் கலந்துகொள்பவர்கள் பெயரை முன்பதிவு செய்வது அவசியம்
முன்பதிவுக்கு

திரு. **இராஜகோபால்** செல் : 93605 79181
திரு. **சுவாமிநாதன்** செல் : 99422 89420
திரு. **மோகன்** செல் : 92454 40575
திரு. **பாலசுப்ரமணியம்** செல் : 97872 53751

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!





# கடிதம்

அன்புள்ள பகவத் பாதை ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம்.

நான் ஆறுமாத காலமாக பகவத் பாதையைப் படித்து வருகிறேன். என் நண்பர் ஒருவர் மூலம் பகவத் பாதையைப் பற்றித் தெரிந்துகொண்டு இதன் சந்தாதாரர் ஆனேன். பாதையில் வரும் கட்டுரை, கேள்வி-பதில், ஜென் கதைகள் மூலம் பல விளக்கங்கள் பெற்றேன். மிக எளிமையாக உண்மையைப் புரிந்துகொள்ளும்படி உள்ளன. பகவத் ஐயாவின் கட்டுரை ஒவ்வொன்றும் பாதுகாக்க வேண்டிய பொக்கிஷம். எனக்கு எழும் கேள்விகளுக்குப் பதிலாகவே கேள்விபதில் பகுதி வந்து கொண்டு இருக்கிறது. நான் ஏற்கெனவே பல ஜென் கதைகள் படித்துள்ளேன். அவை புதிர்போல இருக்கும். ஆனால் பாதையில் வரும் ஒவ்வொரு ஜென்கதையும் ஞானத்தை எளிதாக புரியவைப்பதுபோல் இருக்கிறது. பகவத் பாதையின் சந்தாதாரர் ஆன இரண்டு மாதத்திலேயே பழைய இதழ்களைப் படிக்க வேண்டும் என்ற விருப்பம் அதிகமாகிவிட்டது. என் நண்பரும் சந்தாதாரராகி 9 மாதமே ஆனதால் அவரிடமிருந்து பழைய பாதை 3 மட்டுமே வாங்கி படிக்க முடிந்தது. அதுவும் மிகவும் தேடுதலுக்குப் பிறகே கிடைக்கப் பெற்றது.

இதுவரை வெளிவந்த பாதை அனைத்தும் கிடைக்காதா என ஏங்கித் தவித்த எனக்கு தற்போது நீங்கள் வெளியிட்டுவரும் பகவத் பாதை ஞானப் பெட்டகம் 3 ஆண்டு தொகுப்பு ஒரு பெரிய புதையலாகவே தோன்றுகிறது. இதுவரை 5 பிரதிகள் வாங்கியுள்ளேன்.

அதில் மூன்றை நண்பர்களுக்கு அன்பளிப்பாக வழங்கியுள்ளேன். இரண்டு எனக்காக வைத்துக்கொண்டேன். ஒன்றை மற்றவர்களுக்கு படிக்கக் கொடுத்தாலும் மற்றொன்று பாதுகாப்பாக இருக்குமே என்ற எண்ணத்தில் பத்திரப்படுத்தி வைத்துள்ளேன். இப்புத்தகம் உண்மையிலேயே ஞானப் பெட்டகம்தான் ஞானப் புதையல் தான். இதில் வரும் ஐயாவின் கட்டுரையும், கேள்வி-பதிலும் பல முறை படித்து விட்டேன். ஜென்கதை ஒவ்வொன்றும் அறுமை. பழைய இதழ்கள் கிடைக்கதா என ஏங்கி தவித்த எனக்கு இது மிகப்பெரிய பொக்கிஷம். இனி என் நண்பர்களுக்கு நான் வழங்கும் அன்பளிப்பு இந்த புத்தகமாகத்தான் இருக்கும்.

தற்போது ஒவ்வொரு மாதமும் பாதையை எதிர்பார்த்து வாங்கிப் படித்துப் பாதுகாத்து வரும் எனக்கு இந்த ஞானப்பெட்டகம் தொகுப்பு சிறுக சிறுக சேமித்து பெரிய புதையலாகக் கொடுத்ததுபோல் உள்ளது.

ஸ்ரீபகவத் ஐயா அவர்களுக்கும் உங்கள் எல்லோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



நன்றியுடன்,
**பாலசுப்ரமணி**, ஈரோடு,

## வேண்டுகோள்

சேலம் திருவருட்சோலையில் நமது "ஸ்ரீ பகவத் பவன்" ஆஸ்ரம கட்டிடப் பணி சிறப்பாகவும், விரைவாகவும் நடைபெற்று வருகிறது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 14.09.2015 அன்று கட்டிட பணியை பார்வையிட்டு சென்றார்கள்.

தற்போது Basement வேலைகள் நிறைவுபெறும் தறுவாயில் உள்ளது. இப்பணியை அதிகபட்சமாக 6 மாதத்திற்குள் முடிக்க திட்டமிட்டுள்ளோம். இப்பணிக்காக பல அன்பர்கள் தாங்களாகவே முன்வந்து தங்களது பங்களிப்பை நன்கொடையாக வழங்கி வருகிறார்கள். இருப்பினும் கட்டிட பணியை நிறைவு செய்வதற்கு தொகை இன்னும் அதிகம் தேவைப்படுவதாகவே உள்ளது. இப்பணிக்கு உதவிட அனைவரையும் அன்புடன் வேண்டுகிறோம்.

இதுவரை தங்களது பங்களிப்பாக ரூ.25000/-மும் அதற்கு மேலும் கொடுத்து ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக (Founders) இணைந்துக் கொண்டவர்கள்.

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்,
2. திரு. **E.ராமு,** சென்னை,
3. திரு. **சிவகுரு,** கரூர்,
4. திரு. **S.முருகேசன்,** சென்னை,
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை,
8. திரு. **ஜீவமணி,** சேலம்,
9. திரு. **சரவணன்,** சேலம்,
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்,
11. திரு. **குணாலன்,** கோவை,
12. திரு. **வெங்கட்ராஜ்,** சேலம்
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. Dr. **நாராயணசாமி & செந்தமிழ்செல்வி** குடும்பத்தினர்.
15. திரு. Eng. **முரளி** சென்னை.
16. திருமதி.**வடிவுஅம்மாள் & சம்பந்த** முதலியார்
17. திரு. **முத்துச்செல்வன்,** காஞ்சிபுரம்.
18. திரு. **S.கதிர்வேலவன்,** சென்னை.
19. திருமதி. **சிவசங்கரி,** சென்னை.
20. திரு. **ரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பழம், சென்னை
21. திருமதி. Dr. **விஜயலட்சுமி,** சென்னை
22. திரு. **S.பாலமுருகன்,** USA

# நிகழ்ச்சி நிழல்கள்





ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஆஸ்ரமம் கட்டிட பணியை 14.09.2015 அன்று பார்வையிட்ட போது.



புகைப்பட கலைஞர் திருச்சி சுதாகரன் அவர்களுடன்
நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்



இன்ஜினியருடன் ஐயா
**Plan Discussion** போது....



தர்மபுரியில் ஐயா சிறப்புரையாற்றிய போது...



# "சரணாகதி"



அரசன் ஒருவன் ஞானத் தேடுதல் கொண்டவனாக இருந்தான். அதற்காக உலக அறிவு, இயற்கை அறிவு என அனைத்தையும் பெற விரும்பினான். பூமியில் மனிதர் தோன்றிய நாள் முதல் இதுவரை நடந்த எல்லாம் தனக்குத் தெரிய வேண்டும் என்றான்.

இயற்கையின் தோற்றம் மற்றும் பரிணாமம் அதன் இயக்கம் என அனைத்தையும் அறிந்து கொள்ள விரும்பினான்.

அமைச்சர்கள் சுறுசுறுப்பாயினர். ஏராளமான ஆட்கள் அமர்த்தப்பட்டுச் சுவடிகள் கட்டுக்கட்டாகக் குவிக்கப்பட்டன. ஆயிரமாயிரம் நூற்பிரதிகள் அம்பாரம் அம்பாரமாய்க் கொண்டுவந்து அரண்மனையில் அடுக்கப்பட்டன.

மன்னன் தன்னால் முடிந்தவரை படித்துக் கற்றான். இயற்கை தத்துவங்களையும், சாஸ்திரங்களையெல்லாம் கற்றான். வருடங்கள் ஓடின. ஆனால் மனம் நிறைவு பெற்றதாக தெரியவில்லை. அறிவு முழுமை பெற்றதாகவும் தெரியவில்லை. தெரிந்து கொள்ள வேண்டிய விசயமும் அறிவும் நிறைய இருப்பதாகத் தோன்றியது.

'இவ்வளவு நூல்களையும் படிக்க நான் பல ஜென்மம் எடுத்தாலும் நேரம் போதாது போல் தெரிகிறதே!" என வருந்தினான்.

எவ்வளவு செல்வங்கள் செலவானாலும் பரவாயில்லை எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள எளிய வழிமுறை ஏதாவது இருக்கிறதா? எனப் பாருங்கள் என அமைச்சர்களிடம் கேட்டான்.

அமைச்சர்கள் விசாரித்துச் சொன்னார்கள்,

"நமது நாட்டிலேயே அனைத்தும் அறிந்த ஞானி ஒருவர் எளிமையாக வாழ்ந்து கொண்டிருப்பதாகவும் அவரைச் சந்தித்தால் அறிவு முழுமை பெற ஏதாவது வழி கிடைக்கும்" எனக் கூறினார்கள்

அரசனும் ஞானியை அவரது இல்லத்தில் சந்தித்தான்.

"சுவாமி, என் அறிவு முழுமை பெற வேண்டும். எனக்கு ஞானம் கிடைக்க வேண்டும். எல்லாவற்றையும் அறிந்தவனாக நான் மாற வேண்டும். அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்றான் அரசன்.

''தற்போது அதற்காக என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்றார் ஞானி.

"தேடித்தேடி நிறைய கற்றுக்கொண்டிருக்கிறேன். அதனால் நிறைய அறிவைப் பெற்றாலும் மனம் மட்டும் முழுமையானதாகத் தெரியவில்லை. மனம் நிறைவடையவில்லை. என்ன செய்வது?" என்றான் அரசன்.

"இப்படி முயன்றால் ஒருபோதும் முடியாது, இந்த ஜென்மம் போதாது." என்றார் ஞானி.

"ஆமாம் சுவாமி, பிறகு என்னதான் செய்வது? இன்னும் வேகமாகத் தேட வேண்டுமா?" எனக் கேட்டான் அரசன்.

"நீ எவ்வளவு வேகமாக தேடுகிறாயோ அவ்வளவு வேகமாக இன்னும் தெரியாதது நிறைய இருக்கிறது என்பதையும் தெரிந்து கொள்வாய்" என்றார் குரு.

''குருவே பிறகு எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதற்கு என்னதான் செய்ய வேண்டும்?" என்றான் அரசன்.

"நீ முதலில் ஓர் உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும், இந்த உண்மையைப் புரிந்து கொள்வதே நீ எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதற்குச் சமமாகும்." என்றார் ஞானி.

"குருவே தயவு கூர்ந்து அந்த உண்மையைக் கூறுங்களேன்." எனக் கேட்டான் அரசன்.

**"எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள முடியாது என்பதைப் புரிந்து கொள்வதே எல்லாவற்றையும் தெரிந்துகொள்வதாகும்.** நாம் மனதைக் கொண்டு மட்டுமே நம்மால் அனைத்தையும் அறிந்து கொள்ள முடியும். அதைத் தாண்டி நம்மால் எதையும் தெரிந்து கொள்ள முடியாது. மனம் என்பது தோன்றி மறையக் கூடிய ஒன்றுதான் என்ற நம் மனதின் இயலாமையைப் புரிந்து கொண்டு நம் மனதிடம் நாம் சரணாகதி அடைவதையே அகச் சரணாகதி என்கிறோம்...

"இந்தச் சரணாகதியைக் கொடுக்கும் புரிதலே ஞானம்" என்றார் குரு.

புரிந்து கொண்ட அரசன் தன் தேடுதலை விட்டு விட்டு மன அமைதி பெற்றான்.

**"மனதுக்கு நாம் விடுதலை கொடுத்துவிட்டால் மனம் நமக்கு விடுதலை கொடுத்துவிடும்."**

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555